12th February 1959]

குறைத்து, அம்மாதிரி இன்ஸ்டிட்யூட்டிலே சேர்த்துக் கொள்வதற்கு அரசாங்கம் விதிவிலக்கு கொடுத்தால் நன்ருக இருக்கும். அப்படிச் செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பயிற்சிக்கு வருகிறவர்களுக்கு, படிப்பு குறைந்தபட்சமாக என்ன இருக்கவேண்டும் என்பதிலே எவ்வளவு குறைவாக வைக்க முடியுமோ அவ்வாறு தான் வைக்கப்பட்டிருக்கிறது.

SRI N. MARUDACHALAM : விவசாயிகள் என்னும்போது பெரு நில விவசாயிகள், சிறு நில விவசாயிகள், நிலமே இல்லாத விவசாயிக் கூலிகள் என்று பிரிவுப்படுத்தி. ஒவ்வொரு பிரிவிலும் எத்தனை பேர்கள் என்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் ஜில்லாவாரியாக எத்தனை எத்தனை பேர்கள் என்று அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

MR. SPEAKER : How can the Hon. Minister answer the question? When Members want such information, it is better they put separate questions.

SRI K. ANBAZHAGAN : விவசாயத்துறையிலே ஈடுபட்டுள்ளவர்களுடைய தொகை மொத்த மக்களில் 50 சத விகிதத்திற்கு மேற்படாத அளவுத் தான் இருக்கவேண்டும் என்று கொண்டு, மீதமுள்ளவர்களை—விவசாயத் தொழிலில் உள்ளவர்களை—வேறு தொழில் துறைகளிலே செலுத்துவதற்கு மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது வழிவகை காணுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசாங்கத்தின் தொழில் வளர்ச்சித் திட்டத்தின் லட்சியம் அதுதான்.

*Bhavanagar Fund*

* 260 *Q*.—SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) how much contribution from the Bhavanagar Fund was allotted to Tirunelveli district for the current year;

(*b*) for what purpose the allotment for the Tirunelveli district was utilised; and

(*c*) the procedure for applying for help from that fund?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Rs. 210 (rupees two hundred and ten only).

(*b*) To afford financial assistance to three poor tuberculosis patients.

(*c*) Applications should be submitted to the Secretary to Government, Health, Education and Local Administration Department, Madras-9, through the Director of Medical Services,

[12th February 1959

Madras-6, explaining the circumstances under which financial assistance is sought, producing a medical certificate of illness obtained from a Government Medical Officer or Honorary Medical Officer not below the rank of an Assistant Surgeon and a poverty certificate obtained from any local Revenue Officer not below the rank of Tahsildar.

### *Overseas scholarships*

* 261 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of scholars sent from this State under the scheme of Overseas Scholarships to Scheduled Castes, Scheduled Tribes and other Backward Classes in the year 1954-58, year-war; and

(*b*) among them how many are (i) State Government employees, (ii) non-Government employees, and (iii) students?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Selection for Overseas Scholarships is made by the Union Public Service Commission on All-India basis. They do not communicate to the State Government the names of candidates selected by them each year from each State.

(*b*) Does not arise.

SRI K. SATTANATHA KARAYALAR : நமது மாகாணத்தவர்கள் எத்தனை பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள் என்பதை அறிவதற்கு மத்திய சர்க்காருக்கு எழுதப்பட்டதா ? அப்படியானால், அதற்குப் பதில் எப்பொழுது கிடைக்கும் ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய சர்க்காரிடம் எழுதிக் கேட்டோம். நமது மாகாணத்திலிருந்து அவர்கள் 12 பேர்களை "ஸெலக்ட்" பண்ணியிருக்கிறார்கள். அவர்களில் நால்வர் ஹரிஜனங்கள், நால்வர் ஆதி வாசிகள், நால்வர் பிற்பட்ட வகுப்பினர்.

SRI. T. S. RAMASWAMY PILLAI : நம்முடைய அரசாங்கத்தில் உள்ள உத்தியோகஸ்தர்களில் எத்தனை பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்று எழுதியிருக்கிறது? அந்த விவரத்தை சொல்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது சொல்வதற்கில்லை. தனியாக கேள்வி போட்டால் சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் பதிலளிக்கையில், "மத்திய சர்க்கார் நமது மாநிலத்திலிருந்து எத்தனை பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்பது பற்றி புள்ளி விவரம் தர முடியாது" என்று சொன்னதாகத் தெரிவித்தார்கள். அப்படி அறிவிப்பது நம்முடைய மாநில சர்க்காருக்குள்ள நியாயமான உரிமையை மத்திய சர்க்கார் அலட்சியப்படுத்தியது ஆகாதா ? எவ்வளவு என்று அறிவிக்க அரசாங்கம் கட்டிமைப்பட்டிருக்கவில்லையா ?